# நவவித ஸம்பந்தம்

டாக்டர் அ. திருவேங்கடத்தையங்கார்

பிள்ளை உலகாரியர் அருளிய அஷ்டாதச(18) ரஹஸ்யங்களில் ஒன்று இந்த 'நவவித ஸம்பந்தம்' என்கிற சிறு நூல். முமுக்ஷுவுக்கு அறிய வேண்டிய ரஹஸ்யம் மூன்று என்று தொடங்கும் முமுக்ஷுப்படியின் முதல் சூர்ணிகை தெரிவிப்பது திருமந்த்ரம், த்வயம் (கிருஷ்ண) சரம ச்லோகம் ஆகிய மூன்றிற்கு ரஹஸ்யங்கள் என்ற ஏற்றமுள்ளது என்பது. ஆனாலும் 'நவவிதஸம்பந்தம்' என்கிற சிறு



க்ரந்தமும் ரஹஸ்யங்களில் ஒன்றாக கணிக்கப்படுவதின் காரணம், ப்ரதம ரஹஸ்யமான திருமந்த்ரத்தின் தாத்பர்யம் நவவிதஸம்பந்தமென்றும் இதை ஸ்வஸ்வரூபம் அறிந்த ஒவ்வொருவனும் நிச்சலும் சிந்தை செய்ய வேண்டும் என்பதே. சிந்தை செய்தால் மட்டும் போதாது ஸத்பாத்ரத்திற்கு உபதேசிக்கவும் வேண்டும் என்பதும் லோகாசார்யரின் திருவுள்ளம்.

லோகாசார்யரின் நவவிதஸம்பந்த விவரணத்தைத் தெரிந்து கொள்ளும் முன் இதற்கு வேதாந்தம் எவ்வாறு அடித்தளமாக அமைந்துள்ளது என்று அறிந்து கொள்வது அவசியம். 'அநேந ஜீவேந ஆத்மநா அநுப்ரவிசய நாமரூபே வ்யாகரவாணி' (சாந்தோக்யம்), 'அந்த: ப்ரவிஷ்ட: சாஸ்தா ஜநாநாம் ஸர்வாத்மா', 'ய ஆத்மநி திஷ்டன் ஆந்மாநோ(அ)ந்தரோ யமாத்மா ந வேத யஸ்ய ஆத்மா சரீரம் ய ஆத்மாநம் அந்தரோ யமயதி ஸ த ஆத்மாந்தர்யாம்யம்ருத:' என்ற பறபல ச்ருதி வாக்யங்கள் ப்ரஹ்மத்திற்கும் ஜகத்திற்கும் சரீர சரீ பாவத்தை உறுதியாக்குவதை ஸ்ரீபாஷ்யகாரர் ஜன்மாதி கரணம், காரணத்வாதி கரணம், விலக்ஷணத்வாதிகரணம் போன்ற பல அதிகரணங்களில் விளக்கியருளியுள்ளார். ஸகல ச்ருதி தாத்பர்யமான வேதார்த்த ஸங்க்ரஹத்தில் இதை மேலும் தெளிவாக்கியுள்ளார். 'அயமேவ ச ஆத்மசரீரபாவ: சேஷசேஷிபாவச்ச ஸர்வாத்மநா ஆதார தயா நியந்த்ருதயா சேஷிதயா ச ஆப்நோதி இதி ஆத்மா. ஸர்வாத்மநா ஆதேயதயா நியாம்யதயா சேஷதயாச அப்ருதக்ஸித்தம் ப்ரகார பூதம் இத்யாகார: சரீர மிதி ச உச்யதே' என்று அருளிச் செய்வதனால் சரீர சரீரி பாவம், சேஷ–சேஷி பாவம், ஆதார – ஆதேய பாவம், நியந்த்ரு நியாம்ய பாவம், ப்ரகார – ப்ரகாரிபாவம் (விசேஷண–விசேஷ்ய பாவம்) ஆகியவைகள் ஜீவ – பரப்ரஹ்ம ஸம்பந்தின் பல்வேறு விளக்கங்கள் என்று தேறுகிறது. ஆண்டாளும், 'உன்றன்றோடுறவேல் நமக்கு இங்கொழிக்க ஒழியாது'. 'எற்றைக்கும் ஏழேழ்

பிறவிக்கும் உன்தன்னோடுற்றோமே யாவோம்— உனக்கே நாமாட் செய்வோம்' என்று எம்பெருமானோடு சேதனனுக்கு உள்ள ஸம்பந்தம் எம்பெருமான் நினைத்தாலும் சேதனன் நினைத்தாலும் இருவருமே சேர்ந்து நினைத்தாலும் அறுக்கப் போகாது என்று அருளியுள்ளாள். இப்படி யாராலும் பிரிக்கமுடியாத ஜீவ – பர ஸம்பந்தத்தை ஒன்பது விதமாகப் பார்க்கலாம் என்பது பிள்ளை உலகாரியரின் திருவுள்ளம்.

ப்ரதம ரஹஸ்யமான திருமந்த்ரத்தின் தாத்பர்யமான நவவித ஸம்தபந்தத்தை முதன் முன்னமே ஒரு ச்லோகம் மூலமாக சுருக்கமாக அறிவிக்கிறார் லோகாசார்யர்.

பிதா ச ரக்ஷக: சேஷீ பர்த்தா ஜ்ஞேயோ ரமாபதி:
ஸ்வாம்யாதாரோ மமாத்மா ச போக்தா ச ஆத்யமநூதித:

1. ப்ரணவத்திலுள்ள அகாரம் அக்ஷரராசிக் கெல்லாம் ஆதியாயிருப்பதால் பிதா—புத்ர ஸம்பந்தம்;

2. 'அவ' என்கிற தாது ரக்ஷணத்தைச் சொல்லுகையாலும் அந்த தாதுவின் உயிர்ச் சொல் 'அ' ஆனபடியால் ரக்ஷ்ய—ரக்ஷக ஸம்பந்தம்;

3. அகாரத்தில் ஏறி மறைந்துள்ள (ஆய என்கிற) சதுர்த்தியால் சேஷ – சேஷி ஸம்பந்தம்;

4. உகாரத்தின் அர்த்தமான அவதாரணத் தாலே பர்த்ரு பார்யா ஸம்பந்தம்;

5. மகாரம் ஜ்ஞானத்தைக் குறிப்பிடுவதால் ஜ்ஞாத்ரு—ஜ்ஞேய ஸம்பந்தம்;

6. 'நம:' என்கிறதால் ஸ்வ—ஸ்வாமி ஸம்பந்தம்;

7. 'நார' என்கிற பதத்தால் சரீர – சரீரி ஸம்பந்தம்;

8. 'அயந என்கிற பதத்தால் ஆதார— ஆதேய ஸம்பந்தம்;

9. 'ஆய' என்கிற நான்காம் வேற்றுமை உருபினால் போக்தரு— போக்ய ஸம்பந்தம்;

இவ்வாறு ஒன்பது விதமான ஸம்பந்தங் களை மேற்சொன்ன ச்லோகம் தெரிவிக்கிறது என்பது லோகாசார்யரின் பூர்வ பீடிகை. இந்த ச்லோகத்தை அருளியவர் லோகாசார்யர் என்று சிலர் கருதுவார்கள். பரம்பரையாக வந்த இந்த ச்லோகத்தை அவர் எடுத்து ஆள்கின்றாரே யல்லாது அவரே இதற்கு கர்த்தா என்று சொல்ல முடியாது. மேலே அவர் விவரிக்கும் நவவித ஸம்பந்த ஸூத்ரங்களில் பிதா—புத்ர ஸம்பந்தத் தைச் சொல்லாமல் விசேஷண விசேஷ்ய ஸம்பந்தத்தை முதலில் எடுத்து விளக்குகிறார். நவவித ஸம்பந்தங்களில் ஒவ்வொன்றையும் மூன்றாகப் பிரித்து உபபாதிக்கிறார்.

(1) விசேஷண – விசேஷ்ய ஸம்பந்தம்

(1) ப்ரக்ருத்யர்த்த சங்கா நிவர்த்தனம்: அகாரார்த்த சங்கா நிவர்த்தனம் என்று கொள்ளலாம். ஸமஸ்த சப்தராசிக்கெல்லாம் காரணமான அகாரத்தாலே அறிப்படுபவன் எம்பெருமான். எல்லா சப்தங்களாலும் தெரிவிக்கப்படுகிற சிதசித்துக்களுக்கு காரணமானவன் ஈசுவரன். நித்யமான சிதசித்துக்கள் காரியங்களாகிறபடியால் அவைகள் அநித்யங்களோ என்ற சந்தேகம் ஏற்படுகிறது. (காரணமான மண் நித்யம் – காரியமான குடம் அநித்யந்தானே). இந்த சந்தேகத்தைக் களைகிறது இந்த ஸம்பந்தம். சிதசித்துக்கள் ப்ரஹ்மத்திற்கு நித்ய விசேஷங்களாகையாலே அவைகளுக்கு எப்பொழுதும் அநித்யத்வம் ஏற்படாது. (இந்த ஸம்பந்தத்தில் பிதா—புத்ர ஸம்பந்தம் அந்தர்பாவி யாகிறது. பிதா காரணம்; புத்ரன் கார்யம்.)

(2) ஆச்ரயாச்ரயி: குணம் ஒரு ஆச்ரயத்தை (குணி) அண்டியே நிற்கும். வெண்மை தனியே இருக்காது. துணியைப் பற்றி இருக்கும். அதே போல் சிதசித்துக்கள் பகவத் ஸ்வரூபத்தை விட்டால் நிலைக்காது போய்விடும்.

(3) வ்யாவர்த்தக – வ்யாவர்த்யமாகை: சிதசித்துக்கள் தங்களை யொழிந்ததான பகவத் ஸ்வரூபத்தை விலக்ஷணமானதாகக் காட்டும். அதே க்ரமத்தில் பகவத் ஸ்வரூபம் சிதசித்துக்கள் மூலமாகவே தன்னைப் பிரகாசிப்பிக்கும்.

இந்த விசேஷண – விசேஷ்ய ஸம்பந்தத்தால் ஜகத்ஸ்ருஷ்டிக்குக் காரணம் ஆனவன் ஈசுவரன் ஒருவனே என்று தேறும்.

(2) ரக்ஷ்ய – ரக்ஷக ஸம்பந்தம்.

(1) 'அவ' என்கிற தாது ரக்ஷணத்தைக் குறிக்கிறபடியாலும் ரக்ஷிப்பவன் ஒருவன் என்றும் ரக்ஷிக்கப்படுவது ஒன்று என்றும் ஏற்படுகிற

படியாலும் 'யதோ வா இமானி பூதானி ஜாயந்தே' இத்யாதி ப்ருஹதாரண்யக ச்ருதி ஸித்தமான ரக்ஷ்யரக்ஷக ஸ்வரூபம் தெளிவாகிறது.

(2) ப்ரக்ருத்யர்த்தாந்தர பாவித்வம்: ப்ரக்ருதியாகிற அகாரம் சிதசித்வர்க்க ஸ்ருஷ்டியைக் காட்டுகிறது. ஸ்ருஷ்டிக்கு மட்டும் காரணமாயிருந்து விடாமல் அதன்பின் அவசியமான ரக்ஷணத்திற்கும் ஈசுவரனே கடவனாகிறான்.

(3) உபய ஸ்வரூபோசிதமாகை: ரக்ஷ்யமான சிதசித்துக்களுக்கு பாரதந்த்ர்யமே உத்தேச்யம். ரக்ஷகனான ஈசுவரனுக்கு ஸ்வாதந்த்ர்யம் ஸ்வரூபம். பரதந்த்ரமானவை ஸ்வரக்ஷணத்திலே ஈடுபடுவது ஸ்வரூபோசிதமன்று. ஸ்வரக்ஷணே ஸ்வாந்வயம் கூடாது என்று எடுத்துக் காட்டும் இந்த ஸம்பந்தம்.

இந்த ஸம்பந்த ஜ்ஞானம் ஏற்பட்ட பொழுது 'ஈசுவரனை யொழிந்தவர்கள் ரக்ஷகரல்லர்' என்ற விச்வாஸ மேற்படும்.

(3) சேஷ – சேஷி ஸம்பந்தம்.

(1) விபக்தி ஸித்தமாகை: நாராயண சப்தத்தைக் குறிக்கும் அகாரத்தில் மறைந்துள்ள நான்காம் வேற்றுமையினால் காட்டப்படுவது சேஷத்வம். 'தாதர்த்யே சதுர்த்தி' என்று இலக்கணஞ் சொல்லுகையாலே ஈசுவரனுக்கே விநியோகப்படுவது சிதசித்துக்கள்.

(2) தாத்வர்த்த பரார்த்ததா ப்ரகாசமாகை 'அவ' என்கிற தாதுவின் பொருள் ரக்ஷணம். இந்த ரக்ஷணம் ரக்ஷ்யமாகிற சிதசித்துக்களை அபேக்ஷித்திருந்தாலும் சரீரியான சேஷிக்கே ப்ரயோஜனமானது. உடைமை தன்னைக் காப்பாற்றிக் கொள்ளாது. உடையவன் தான் தன் வஸ்துவைக் காப்பாற்றிக் கொள்ள வேண்டும்.

(3) போகாநுரூபதா தர்சகமாகை: சேஷி, சேஷ வஸ்துவை விநியோகம் கொள்ளும் சமயம் சேஷவஸ்து தன்னுடைய தாழ்மையின் காரணமாக தன்னை விலக்கிக் கொள்ளாது இருப்பதே சேஷவஸ்து ஸ்வரூபம் என்று காட்டுவது இந்த ஸம்பந்தம்.

இந்த ஸம்பந்த ஜ்ஞானம் தோன்றினால் 'ஈசுவரன் ஒருவனே சேஷீ' என்கிற எண்ணம் திடப்படும்.

(4) பர்த்ரு – பார்யா ஸம்பந்தம்.

(1) உகார ஸித்தம்: உகாரம் ரக்ஷகனான ஈசுவரனுக்கு ரக்ஷ்யமான ஆத்மஸ்வரூபம் அற்றுத் தீர்ந்திருக்குமதைக் காட்டும் அவதாரணம். இது நான்காம் வேற்றுமையின் பொருளின் அழுத்தமான நிலை. 'உனக்கே நாமாட் செய்வோம்' 'கொண்டானையல்லால் அறியாக் குலமகள் போல்' என்ற திவ்யப்ரபந்தப் பாசுரங்கள் எடுத்துக்காட்டும் நிலை.

(2) விபக்த்யர்த்த சோதகமாகை: இதுவும் நான்காம் வேற்றுமையின் பொருளை வேறொரு விதத்தில் அழுத்தமாகத் தெரிவிப்பதாகும். ஒரு பத்னியின் சேஷத்வம் அந்ய சேஷத்வம் கழிந்திருக்கும் போது தான் நிறம் பெறும். அதே போல மறைந்துள்ள நான்காம் வேற்றுமையின் அர்த்தமான பகவச் சேஷத்வம் மற்ற எதற்கும் சேஷப்படாமல் அந்யார்ஹத்வம் என்ற குறையற்றிருக்கை. (மந்த்ரங்களில் 'இந்த்ராய ஸ்வாஹா' என்ற பின் 'இந்த்ராய இதம் – நமம' என்று இதர தேவதைகளுக்கோ தனக்கோ அர்ப்பணிக்காத முறையைப் போன்று அந்ய சேஷம் சூழ்ந்திருக்கை ப்ரதானம் என்று தெரிவிக்கிறது.

(3) ஸ்வரூபப்ராப்தமாகை: பர்த்ருத்வமும் பார்யாத்வமும் ஆண்–பெண் தன்மைகளைக் குறிக்கும். அநந்யார்ஹமான பாரதந்த்ர்யமே ஜீவனுக்கு ஸ்வரூபம் என்று தெளிவாக்குவது இந்த ஸம்பந்தம்.

இந்த ஸம்பந்த ஜ்ஞானம் பிறந்தால் மற்றொன்றிற்கு ஆட்பட்டிருக்கமாட்டாத அநந்யார்ஹத்வம் உறுதிப்படும்.

5. ஜ்ஞாத்ரு – ஜ்ஞேய ஸம்பந்தம்:

(1) மகாரத்ருச்யமாகை: 'மந' என்ற தாதுவின் பொருள் ஜ்ஞானம். இதுவே மகாரமெனப்படுவது இது ஜீவனைக் குறிப்பதும் கூட. இந்த ஜ்ஞானம் மூலமாக அறியத்தக்கவை பகவத் ஸ்வரூபாதிகள். இதுவே ஜ்ஞானத்திற்கு எல்லை நிலம். இடைப்பட்ட விஷயங்களல்ல.

(2) உகாரார்த்தாநுஸந்தாநாபேக்ஷிதம் ஆகை: உகாரம் தெரிவிக்கும் பர்த்ருபார்யா ஸம்பந்தத்தை உள்ளபடி அறிய, தகுந்த ஜ்ஞானம் வேண்டும். இதே ஜ்ஞானம் அல்லது ஜ்ஞாத்ருத்வம்

இல்லாதுபோனால் மற்றொன்றிற்கு ஆட்பட்டிராத அநந்யார்ஹத்வம் ஏற்படாது.

(3) அசித்வ்யாவ்ருத்தி வேஷமாகை: ஈசுவரனுக்கும் சேதனனுக்கும் இணைபிரியா ஸம்பந்தமுண்டென்று காட்டுவதும் ஈசுவரன் தான் அறியப்படுபவன் (ஜ்ஞேயம்) சேதனனான தான் அறிபவன் (ஜ்ஞாதா) என்று காட்டுவதும் ஈசுவரனுக்கு அதீனமாயும் அவனுக்குப் பிரயோஜனமாயும் இருப்பதுதான் ஜ்ஞாத்ருத்வத்துக்கு அடையாளம் என்று காட்டுவது இந்த ஸம்பந்தம். அசித்துக்கு சேஷத்வ–பாரதந்த்ர்யங்கள் ஸ்வாபாவிகமானாலும் அப்படிப்பட்ட ஜ்ஞானம் அசித்திற்கு இல்லை.

இந்த ஸம்பந்த ஜ்ஞானம் தோன்றினால் அறியப்படவேண்டியவன் ஈசுவரனும் அவனது ஸ்வரூபாதிகளும் என்ற தெளிவு ஏற்படும்.

(6) ஸ்வ – ஸ்வாமி ஸம்பந்தம்:

(1) நமச் சப்தார்த்த தாத்பர்யமாயிருப்பது: நம: என்கிற சப்தமானது 'நான் ஈசுவரனைப் பற்றினேன்' என்ற அஹங்காரத்தையும் பேற்றுதலாலான சுகம் என்னுடையது என்ற மமகாரத்தையும் அழித்துக் காட்டுவதாகும். பலனைக் கொடுப்பதும் பலனால் ஆநந்திப்பதும் சேதனனுக்கன்று ஈசுவரனுக்கேயாம். சேதனன் ஈசுவரனது உடைமையானபடியால் உடைமையால் ஆநந்திப்பவன் ஈசுவரனே என்று தேறுகிறது.

(2) மகாரார்த்த நிபந்தன ப்ரம நாசகமாகை: மகாரார்த்தமான ஜ்ஞாத்ருத்வத்தின் காரணமாக வந்த கர்த்ருத்வ ப்ரமத்தை (மயக்கத்தை)ப் போக்குவது. இந்த ஸம்பந்த ஜ்ஞானம் பராதீனமான ஜீவனின் கர்த்ருத்வாதி குண விசேஷங்களும் பராதீனமே என்று காட்டி ஜீவனின் ஸ்வதந்த்ர ப்ரவ்ருத்தியை இல்லை செய்வது இந்த ஸம்பந்த ஜ்ஞானம்.

(3) ஸ்வாபாவிகமாகை: ஜீவனின் அஹங்கார–மமகாரங்கள் வந்தேறியானவை. "ஸ்வத்வம் ஆத்மநி ஸஞ்ஜாதம், ஸ்வாமித்வம் ப்ரஹ்மணி ஸ்திதம்' என்கிறபடி சேதன–ஈசுவரர்களின் ஸ்வ–ஸ்வாமி ஸம்பந்தம் தன்னடைவே தேறுவது. உடைமைக்கு தன்னை ரக்ஷித்துக் கொள்வது தகாது – முடியாது உடையவனே உடைமையைப் பேணக் கடமைப்பட்டவன் என்று காட்டுவது இந்த ஸம்பந்தம்.

இந்த ஸம்பந்த ஜ்ஞானத்தினால் சேதனனுக்கு தான் ஸ்வதந்த்ரன் என்கிற மயக்கம் தீரும்.

(7) சரீர–சரீரி ஸம்பந்தம்

(1) ஸமாஸ விசேஷ ஸித்தம் ஆகை: 'நாராயண' பதத்திற்கு பஹுவ்ரீஹி ஸமாஸ க்ரமத்தில் 'நாரா: அயநம் யஸ்ய ஸ:' என்கிற விக்ரஹ வாக்யம் காட்டுவது. வ்யாப்யமான 'நாரங்கள்' (நித்ய வஸ்துக்களின் திரள்) சரீரமாய் "அநேந ஜீவேந ஆத்மநா அநுப்ரவிச்ய....." என்கிற ச்ருதி வாக்யத்தின்படி அந்தர் வ்யாப்தியாலே வ்யாபகமான ஈசுவரன் சரீரியாய்த் தோன்றுகை.

(2) 'நம:' சப்தார்த்த–ஸ்வரூபப்ரகாசகம் ஆகை: 'நம:' என்கிற சொல்லின் தாத்பர்யம் ஸ்வ–ஸ்வாமிபாவம். வீடு தோட்டம் போன்றவை போல சில சமயம் உடையவன் வசத்திலும் சில சமயம் அவைகளே மற்றவன் வசத்திலும் இருப்பது போலல்லாது இதே சரீரி–சரீரி ஸம்பந்தம் ஒன்றை விட்டு ஒன்று எப்பொழுதும் பிரியாதிருக்கிற (அப்ருதக்ஸித்தம்) நிலையைக் காட்டுகிறது.

(3) ஸாமாநாதிகரண யோக்யமாகை: பிந்நமான குணங்களைக் குறிக்கும் இரு வேறு சொற்கள் இணைந்து அவ்விரு குணங்களையும் கொண்ட வேறு ஒரு (பண்புத்) தொகைச் சொல்லாக அமைவதே ஸாமாநாதிகரண்யத்தின் அடிப்படையாகும். ('பிந்நப்ரவ்ருத்தி நிமித்தாநாம் சப்தாநாம் ஏகஸ்மின் அர்த்தே வ்ருத்தி: ஸாமாநாதிகரண்யம் என்பது ஸ்ரீபாஷ்யகாரரின் விளக்கம்). (ஸ்வரூபத்தாலே) பிந்நமான ஜீவ–ஈசுவர ஸ்வரூபங்கள் சரீர–சரீரி ஐக்யத்தாலே ஒன்றெனக் கொள்ளப்படுகின்றன. அப்ருதக்ஸித்தத்வத்திற்கும் ஸாமாநாதி கரண்யத்திற்கும் இடையே பேதமுண்டு. சரீர–சரீரி பாவரூப ஐக்யத்தினால் ஒன்றாகக் கொள்ளப்படுவது விசிஷ்டாத்வைத ஸித்தாந்தத்தின் அடிப்படைத் தத்வமாகும்.

இந்த ஜ்ஞானம் உண்டானால் ஈசுவரனும் சிதசித் வஸ்துக்களும் ஸ்வரூபத்தினால்

பிந்நமானவை; ஆனாலும் சரீர–சரீரி க்ரமத்தில் ஒன்று என்கிற தெளிவு பிறக்கும்.

(8) தார்ய–தாரக ஸம்பந்தம்:

(1) ஸமாஸாந்தர ஸித்தமாயிருப்பது: 'நாராணாம் அயநம்' என்கிற தத்புருஷ ஸமாஸம் தெரிவிப்பது நாரங்கள் 'தார்ய'மாயும், 'அயந' பதத்தாலே சொல்லப்படுகிற ஈசுவரன் 'தாரக'னாயும் தோன்றும் பஹிர்வ்யாப்திக்ரமம். ஈச்வரனே ஸமஸ்த ஜகத்துக்கும் தாரகனா யிருந்து கொண்டு, அவை அவனுடைய விபூதிகள் என்று தெரிவிப்பது இந்த ஸம்பந்தம். இதையே ஆதார–ஆதேய ஸம்பந்தமென்றும் கொள்ளலாம்.

(2) சரீர–சரீரி ஸம்பந்தைக லக்ஷணமா யிருக்கை: ஆதேயமாக, தாங்கப்படுவதாக – இருப்பது சரீர லக்ஷணம். ஆதாரமாக – தாங்குமதாகவிருப்பதும் (விதேயத்வம்) அவனுக்கு சேஷப்பட்டு இருப்பதும் (சேஷத்வம்) வெளிப்படுவது, இந்த ஆதார–ஆதேய ஸம்பந்தத்தினால். ஆகவே ஆதார–ஆதேய ரூப லக்ஷணம் விலக்ஷணமானது.

(3) அசிதவிசேஷஸ்த்தி ஹேதுவாகை: "அநேந ஜீவேந ஆத்மநா அநுப்ரவிச்ய....." இத்யாதி ச்ருதி வாக்யத்தாலே தெரிவிக்கப் படுகிற அந்தர்வ்யாப்தியிலே சேதநஸ்திதி பிரதானம் பெறுகிறது. பஹிர் வ்யாப்தி க்ரமத்தில் சேதநாசேதநங்கள் இரண்டினுடையவும் ஸ்வரூப ஸ்திதி வ்யாபாரங்களுக்குக் காரணமாய்த் தோன்றுகை இந்த தார்யதாரக ஸம்பந்தத்தின் விசேஷமாகும். சிதசித் வஸ்துக்களின் நித்யஸ்திதிக்குக் காரணம் இந்த ஸம்பந்தம். இந்த ஸ்திதியும் அசித்ஸமானமாக ஈசுவர நியாம்யமாக இருக்கும்.

இந்த ஸம்பந்த ஜ்ஞான மேற்பட்டால் ஸர்வ ஜகத்துக்கும் தாரகன் ஈசுவரன் மட்டுமே என்ற எண்ணம் உறுதிப்படும்.

(9) போக்தரு – போக்ய ஸம்பந்தம்:

(1) சரம விபக்திஸித்தம் ஆகை: 'நாராயணாய' என்றதிலுள்ள 'ஆய' என்கிற நான்காம் வேற்றுமை உருபினாலே அநந்யார்ஹ சேஷபூதனாயும் மகாரத்தாலே குறிப்பிடப் படுபவனுமாகிற ஜீவனுடைய இயல்பான அடிமைத்தன்மை (சேஷவ்ருத்தி) சேஷ–சேஷி ஸம்பந்தத்தால் கீழே தெரிவிக்கப்பட்டது. இந்த போக்த்ரு – போக்ய ஸம்பந்தத்தினால் கர்த்ருத்வ – போக்த்ருத்வங்கள் சரீரியான பரம சேதனனுக்கு உள்ளதென்றும், சரீரமாயும் சேஷமாயும் உள்ள ஜீவனுக்கு அன்று என்றும் தெளிவாக்கப்படுகிறது. 'தனக்கேயாக எனைக் கொள்ளும் ஈதே எனக்கே கண்ணனை யான் கொள் சிறப்பே' என்கிற திருவாய்மொழிப் பாசுரம் (2–9–4) இதையே விளக்குகின்றது.

(2) பூர்வ ஸம்பந்த ப்ரயோஜன ப்ரதர்சனமாகை: 'தாரக'மான ஸர்ப்பத்திற்கு 'தார்ய'மான விஷமானது அதனால் (ஸர்ப்பத்தினால்) ருசிக்க முடியாதது. ஆகவே ருசி விஷயத்தில் விஷம் அதற்கு நிஷ்ப்ரயோஜனம். தானே தரித்திருந்தாலும் போக்யதை ஏற்பட வழியில்லை. நாக்கிலுள்ள ருசியான ஒரு பொருளை நாக்கு போக்யமாகக் கொள்கிறது. அதே போல் தாரகமான ஈசுவரன் தார்யமான சிதசித்துக்களை போக்யமாகக் கொள்கிறான். சிதசித்துக்கள் போக்யமாயிருந்து கொண்டு போக்தாவான ஈசுவரனுக்குப் பிரயோஜனம் ஆகின்றன.

(3) ப்ரதிஸம்பந்தி போகாநு ரூபம் ஆகை: கைங்கர்யத்தைக் கொள்ளும் (ப்ரதிஸம்பந்தி) ஈசுவரன் சேஷமான சேதனனுடைய கைங்கர்ய ரஸாநுபவத்தைப் பெறுகிறான். கைங்கர்யத் துக்கு இருப்பிடமான சேதனன் சேஷியான ஈசுவரனது ஆநந்தத்தைத் தவிர மற்றொன்று அறியான், முன்னது சேஷியான ஈசுவர ஸ்வரூபம். பின்னது சேஷமான சேஷஸ்வரூபம். சேஷித்வ சேஷத்வங்களின் குற்றமற்ற பரஸ்பர ஸம்பந்தத்தைக் காட்டுவது இந்த ஸம்பந்தம்.

இந்த போக்தரு – போக்ய ஸம்பந்த ஜ்ஞானமானது போக்த்ருத்வம் ஈசுவரன் ஒருவனுக்கே என்று நிஷ்கர்ஷிக்கும்.

இப்படி பிள்ளைலோகாசார்யர் ஈசுவரனுக்கும் சிதசித்துக்களுக்கும் உள்ள ஸம்பந்தம் பின்னிப் பிணைந்த ஒன்று என்பதை இந்த நவவித ஸம்பந்தம் என்ற க்ரந்தம் மூலமாக பரக்க அருளிச் செய்துள்ளார்.